


# ருவின் சுபாவம்

இந்தத் தெருவுக்கே அப்படியொரு சுபாவம் இருந்தது.

யாரும் மெதுவாகப் பேசிக்கொள்வதிலோ அல்லது சுமுகமாக நடந்துகொள்வதிலோ நம்பிக்கையற்றவர்களைப் போல்தான் இருந்தார்கள். தெரு என்றாலும் அதிகம் வீடுகள் இல்லை. ஒரே வீடு உள்ளே பெரும் காம்பவுண்டாக விரியும். அப்படிப் பார்த்தால் அந்த ஒரு தெருவில் மட்டும் நான்கு காம்பவுண்டு வீடுகள் இருந்தன.

வைத்தியலிங்க மாமா அந்தத் தெருவில்தான் இருந்தார். மாமா அந்தத் தெருவுக்கு வரும்போது நிச்சயமாக இவ்வளவு கூட்டம் இருந்திருக்க முடியாது. இருந்திருந்தால் நிச்சயமாக அவர் வந்திருக்க மாட்டார். ஊரில் மாமாவின் வீடு ஆற்றைப் பார்த்த வீடு. சதா ஆற்று நீரின் சத்தம் கேட்டுக்கொண்டே இருக்கும். ஜன்னலைத் திறந்தால் படித்துறையும், கல் படிக்கட்டுகளும் தெரியும்.

மாமா இருந்ததும் காம்பவுண்டு வீட்டுக்குள்தான். அந்தக் காம்பவுண்டுக்குள் எட்டு வீடுகள் இருந்தன. எதிர் எதிராக வீடுகள். ஆள் குனிந்து வருமாறு வாசல். உள்ளே சின்ன ரூம், அடுப்படி. பின் திறந்தவெளி.

அந்தத் தெருவில் எப்போதும், எதற்காகவும் சண்டை நடந்து கொண்டிருக்கும். மாமாவோடு அவன் முதல் தடவையாக அந்த வீட்டுக்கு வரும்போது தெருவில் சண்டை நடந்து கொண் டிருந்தது. சண்டை போட்டுக்கொண்டிருந்தவர்களில் ஒருவ ருக்கு வயது அதிகம். மற்றவருக்கு வயது அவ்வளவு அதிகம் தெரியவில்லை.

தெருவை மறைத்தவாறே சைக்கிளை நிறுத்திக்கொண்டு மாறி மாறித் திட்டிக்கொண்டிருந்தார்கள். சண்டையின் விவரம் புரியவில்லை என்றாலும், யாரும் அதைக் கவனித்துக் கொண்டது போல் தோன்றவில்லை. ஆட்கள் வருவதும் போவதுமாக இருந்தார்கள்.

அவர்களைக் கடந்து வரும்போது மாமா மிகவும் நிதானமாக வந்தார். காம்பவுண்டு வாசலில் யாரோ ஒரு பெண் உட்கார்ந்திருந்தாள். மாமாவைக் கண்டதும் நகர்ந்துகொண்டாள்.

மாமா வீட்டில் மூன்று பெண்கள் இருந்தார்கள். அவன் போனபோது பெரிய பெண் இருந்தாள். நுழைந்ததும் எதிர்ப்படும் ஈஸி சேரில் படுத்துக்கொண்டிருந்தாள். உள்ளே வேறு பேச்சரவம் இல்லை.

மாமா உள்ளே நேராகப் போய் மறைந்தார். அந்தப் பெண் அவனை ஒரு முறை பார்த்துவிட்டுத் திரும்பிக்கொண்டாள். மாமா வெளியே வரும்போது சட்டையில்லாமல் வந்தார்.

''பிரபா, எந்திரி... அவர் உட்காரட்டும்!''

அவள் சலிப்போடு எழுந்துகொண்டாள். அவள் மாமாவின் ஜாடை. நல்ல உயரமாக இருந்தாள். தலைமுடியைப் பின்னி முன்னால் எடுத்துப் போட்டிருந்தாள்.

அவள் உள்ளே போன பின்பு கேட்டார்.

'அம்மா எங்கே?''

''ரமணியைக் கடைசி வீட்டுப் பய கிண்டல் பண்ணினான். அதான் அம்மா அவளைக் கூட்டிக்கிட்டுப் போயிருக்கா அந்த வீட்டுக்கு.''

அவர் ஒன்றும் சொல்லாமல் உட்கார்ந்திருந்தார். எதிர் வீட்டிலிருந்து அவனை யாரோ பார்த்துக் கொண்டிருந்தார்கள். மாமா கொஞ்ச நேரத்துக்குப் பின்பு அவனையும் கூப்பிட்டார்.

''மாப்பிள்ளை... வாங்க பார்த்திட்டு வந்திடுவோம்.''

அவர்கள் காம்பவுண்டை விட்டு வரும்போது தெருவில் அவர்கள் எதிர்ப்பட்டார்கள். அத்தைக்குத் தலை கலைந்து

போயிருந்தது. காதோரமாக ஈரம் ஓடியிருந்தது. கூடவே, ரமணி வந்துகொண்டிருந்தாள். சின்னப் பெண்ணைப் போலத்தான் இருந்தாள் என்றாலும், சேலை கட்டியிருந்தாள். பச்சைப் பூப் பூவாகப் போட்ட சேலை.

அவர்களைப் பார்த்ததும் மாமா வாசலிலே நின்றுகொண்டார். அத்தை, அவன் இருப்பதைப் பார்த்ததும் தலையைச் சரிசெய்து கொண்டாள்.

''என்ன சண்டை?''

''என்னன்னா... அந்தக் கடைசி வீட்டு நாய் இன்ஸ்டிடியூட்டுக்கு ரமணி போயிட்டு வரும்போது தினம் கிண்டல் பண்றான். அதான் அவன் வீட்ல போய்க் கேட்டுட்டு வந்தேன்!''

ரமணியைப் பார்த்தான். அவள் எதைப் பற்றியும் சட்டை செய்யாமல் இருந்தாள். மாமா எதுவும் விசாரித்துக் கொள்ள வில்லை. அவர்கள் வீட்டில் இருந்தபோது மாமாவின் மூன்று பெண்களும் உள்ளே பேசுவதும் சிரிப்பதும் கேட்டது.

ரமணியின் குரல்தான் ஓங்கியிருந்தது.

''கண்ணாடி போட்டுட்டு ஒருத்தன் நிப்பான் பாருடி, அதான் ப்ளூ சர்ட் போட்டுட்டு. அவனைக் கூடச் சும்மா விடலை. பாவம், முழிச்சான் தெரியுமா. அந்தக் கணேசனுக்குத்தான்டி மொத்த வசவும். அம்மா தாளிச்சுட்டா.''

அவர்கள் சிரித்தார்கள். ரொம்ப நேரம் வரை சிரிப்புச் சத்தம் கேட்டது.

காலையில் அவன் எழுந்திருக்கும் முன்பே அவர்கள் எழுந்திருந் தார்கள். அவனுக்கு காபி வந்தது. சாப்பிடப் போகும்போது பிரபாவிடம் ரமணி கிசுகிசுத்தாள்.

''போகும்போது இவரோட சேர்ந்து போனா அந்தப் பசங்க என்னடி பண்ணுவாங்க''

பிரபா சொன்னாள், ''நான் வரலே, முன்னாடியே போறேன்.''

மாமா கிளம்பிப் போன பின்பு அவன் வெளியே கிளம்பினான். அவன் கிளம்பியதுமே ரமணி கூடவே கிளம்பினாள். ரமணி

சாம்பல் நிறச் சேலையில் இருந்தாள். ஈரத் தலை பிசுக்கென்று தெரிந்தது. காம்பவுண்டு வாசலில் வரும்போது சொன்னாள்:

''என்னோட இன்ஸ்டிடியூட் வரைக்கும் வரீங்களா?''

தலையாட்டினான்.

அவர்கள் தெருவில் வரும்போது வெயில் நிறைந்து போயிருந்தது. இஸ்திரி போடும் பையன் வண்டியைத் தள்ளிக் கொண்டு வந்துகொண்டிருந்தான்.

தெருவில் அவர்கள் போனபோது சிலர் திரும்பிப் பார்த்துப் போனார்கள். வீட்டு மாடியிலிருந்து யாரோ பார்ப்பது தெரிந்தது. அவர்கள் தெருமுனைக்கு வந்தபோது அந்தப் பையன்கள் தென்பட்டார்கள். பெட்டிக் கடையை ஒட்டிய டீக்கடையில் நின்றிருந்தார்கள். ரமணி அவர்களைக் கண்டதும் அவன் பக்கம் திரும்பிச் சொன்னாள்.

''இந்தப் பசங்கதான் கிண்டல் பண்றது!''

அவர்கள் நின்று சிகரெட் குடித்துக்கொண்டிருந்தார்கள். கடையை அவர்கள் கடக்கும்போது கூட்டத்திலிருந்து ஒரு சத்தம் வந்தது.

''கணேசா, உன் ஆள் எப்படி சைடு வாங்குது பாத்தியா?''

கணேசன் என்ற பையனைப் பார்த்தான். அவன் வெறித்துப் போயிருந்தான். இன்ஸ்டிடியூட் மாடியில் இருந்தது. ரமணி மாடிக்கு ஏறும்போது சொன்னாள்:

''நீங்க போயிருங்க... நான் வரும்போது வாரேன்.''

அவன் திரும்பும்போது அவர்கள் இல்லை. சாயங்காலமாக அவர்களில் இருவரை சைக்கிளில் வீட்டுப் பக்கம் பார்த்தான்.

மறுநாள் அவன் ஊருக்குக் கிளம்பினான். பஸ் ஸ்டாப்புக்கு அவன் வந்தபோது தெருவில் சண்டை போட்டுக்கொண்டிருந்த இரண்டு பேரையும் பார்த்தான். ரொம்பவும் அன்னியோன்யமாக இருந்தார்கள்.

மாமா அவனைப் பார்த்துச் சொன்னார்:

''ரெண்டு பேரும் அப்பாவும் பிள்ளையும்.''

அவன் ஊருக்குப் போன பின்பு ஒரு தரம் ரமணி அவனுக்குக் கடிதம் எழுதினாள். பின் எப்பவோ அவள் பெயர் போட்ட வாழ்த்து மடல் வந்தது. அவன் வேலையாக அந்த ஊருக்கு வந்து திரும்பும்போது திரும்பவும் அந்தத் தெருவுக்குப் போனான்.

அவன் போகும்போது தெரு ஏகமாக இருட்டாகியிருந்தது. தெருவில் எதிர்ப்பட்டதும் இருக்கும் மாடி வீட்டுக்குக் கீழே மாமாவும், அத்தையும் நின்று சண்டை போட்டுக் கொண்டிருந்தார்கள். மாமாவின் குரல் உடைந்துபோயிருந்தது.

தெருவில் சிலர் ஆங்காங்கே கூட்டமாகத் தெரிந்தார்கள். அவன் அவர்களை அடைந்தபோது மாமா மாடியைப் பார்த்துக் கத்திக் கொண்டிருந்தார். மாடியில் ரமணியின் முகம் தெரிந்தது.

அவனைப் பார்த்ததும் மாமாவின் சத்தம் இன்னும் அதிகமானது.

''மாப்பிளே... அந்த நாய் நம்ம ரமணியை ரெஜிஸ்தர் கல்யாணம் பண்ணிக்கிட்டானாம். இவளும் சேர்ந்து தலையாட்டினாளாம். போலீஸ்ல புகார் கொடுத்து முட்டிய உடைக்கணும்.''

ரமணி மாடியிலிருந்து அவனைப் பார்த்தாள். கூடவே, அந்த கணேசன் என்ற பையனின் முகம் தெரிந்தது. ரமணியிடம் சிரிப்பு என்பது துளிக் கூட இல்லை. அவன் ரமணியைப் பார்த்து லேசாகச் சிரித்தான். மாமா ரொம்ப நேரம் வரை தெருவில் கத்திக் கொண்டிருந்தார்.

அன்றைக்கும் காம்பவுண்டு கதவு சாத்தப்படாமல் கிடந்தது. மாமா வீட்டில் தெருக்காரர்கள் நிறையக் கூடியிருந்தார்கள். சண்டை போட்ட வயசான மனுசன் கூட அதில் இருந்தார். மாமா ரமணியின் ஒயர் கூடையை எடுத்து எறிந்தார் வெளியே. நிறைய கடிதங்கள், வளையல் துண்டுகள், பாசி, சின்ன மணி பர்ஸ் எனச் சிதறியது. பெரிய எழுத்தில் எழுதப்பட்ட கடிதங்கள்.

வயதான மனிதர்தான் மாமாவிடம் சொன்னார்: ''நடந்தது நடந்துபோச்சு, என்ன செய்ய. வீட்டுக்குக் கூட்டிட்டு வந்து முறைப்படி அனுப்புங்க.''

யாரும் எதுவும் பேசவில்லை. இரவு நீண்டுகொண்டிருந்தது. காலையில் அவன் கிளம்பும்போது தெருவில் யாரோ சண்டை போட்டுக்கொண்டிருந்தார்கள். மாடி வீட்டுக்கு முன் மாமாவின் சைக்கிள் நின்றிருந்தது.